REG. NO. M. 940.

சிவமயம்.
வேலுமயிலுந்துணை.

"VYSIAMITRAN"
Karaikudi.

சந்தா விபரம்.
வருடம் 1-க்கு ... ... ரூ. 5—0—0
மாதம் 6-க்கு ... ... ரூ. 2—12—0
சிலோன், சிங்கப்பூர், பினாங் முதலான வெளியூர்களுக்கு வருடம் 1-க்கு தபால் கூலியுடன் ரூ. 6—0—0

# வைசிய மித்திரன்

பிரதிசோமவாரமும் பிரசுரிக்கப்பெறும்.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருள் மெய்ப்பொருள் காண்ப தறிவு."

பு. 10. காரைக்குடி ரௌத்திரி௵ ஆடி௴ 25உ திங்கட்கிழமை 1920 ௵ ஆகஸ்டு௴ 9 உ. இ. 32.

விளம்பர விகிதம்.
பத்தி 1-க்கு மாதம் 1-க்கு ரூபாய் 25-0-0.
நீண்டகாலம் விளம்பரம் செய்வோர்கள் எழுதிக் குறைந்த விகிதம் தெரிந்து கொள்ளலாம். சில்லரை விளம்பரங்களுக்கு ஒவ்வொரு வரி 1-க்கு அணா 4.

# "INDIA'S IRREPARABLE LOSS."

## ஸ்ரீ பாரத தேவியின் சோகக்காக்ஷி!

## லோகமான்ய பாலகங்காதர திலகர்பெருமானின் மரணம்.

## இந்தியர் மனத்தின் ஆருத்துயரம்.

### திலகரின் ஜீவிய சரிதை.

வறுமையினாலும் பிணியினாலும் வருந்தி நின்று, உண்மையன்போடு ஆதரிப்பார் ஒருவருமின்றி அல்லும் பகலும் அரிதிச் செயல்களை யநுபவித்து, தம்மைத் துன்பக்கடலினின்றும் விடுவிக்குமாறு ஈசனையே வேண்டுகின்ற 33 கோடி இந்தியர்களின் விடுதலையின் பொருட்டு, கடவுளின் அம்சம் பெற்றவராய் அவதரித்து, தமது ஒப்புயர்வற்ற ராஜதந்திரநுண்ணறிவினாலும், பற்பல சாஸ்திர ஆராய்ச்சி ஞானத்தினாலும், சலியாத ஊக்கத்தினாலும், சுயநலத்தியாக உழைப்பினாலும், பாரதமாதாவின் அரும் புதல்வர்களாகிய தமது சகோதர சகோதரிகளுக்கு சுயராஜ்ய வழியைத் திறந்தளித்த ஸ்ரீ திலகமகாராஜன், சென்ற சனிக்கிழமை (31-7-20) இரவு 12-40 மணிக்கு தமது இன்னுயிர் அன்னையாகிய பாரத தேவியை ஆறாத்துயரத்திலாழுமாறு செய்து, தாம் 33 கோடி நிர்ப்பந்தமனிதர்களால்வாழப்பெறுகின்ற இம்மண்ணுலக வாழ்வை நீத்து 33 கோடி சுதந்திர தேவர்களால் வாழப்பெறுகின்ற அவ்விண்ணுலகுக்கேகினார் 'சுயநலத்தியாகம் புரிந்த தர்மதேவதையின் திருவுருவாயவதரித்த மஹான் ஸ்ரீ பாலகங்காதர திலகரேயாம்' எனவுலகம் முழுதும் நன்கறியும். ஆயினும், நம் நேயர்களின் ஞாபகத்தின் பொருட்டு இங்கு அப்பெரியாரது சரிதையைச் சிறிது வரைவோம்.

* *

### பெருமானின் புனித சரித்திரம்.

ஸ்ரீ திலகர், பம்பாய் மாகாணத்தைச் சேர்ந்த மகாராஷ்டிர நாட்டில் 1856ம் ௵ ஜூலை ௴ 23ந் தேதி இப்புண்ய பூமியில் பிறந்தார். பாரததேவியின் ஜீவரத்னம் இவரே யென, விளக்கவேண்டியே போலும் ஈசன், இரத்தினகிரி என்ற கடற்கரைப்பட்டினத்தில் இவரை ஜனிக்குமாறு செய்தார். திலகரது தந்தையாரின் பெயர் ராமசந்திர திலகர். அவர் கணிதசாஸ்திரத்தில் மகாநிபுணரெனப்பிரசித்திபெற்றிருந்ததோடு, அதன் சம்மந்தமான பல நூற்களை எழுதி அச்சிட்டும் வந்தார். அவர் ஸ்கூல் டிப்டி இன்ஸ்பெக்டராக வேலைபார்த்து கௌரவமாய் வாழ்ந்து வந்தார். அன்னாரின் புதல்வராகிய நமது திலகர் பூனாவிலுள்ள கலாசாலையில் படித்து 1876ம் வருடத்தில் பி. ஏ. பரீக்ஷையிலும் 1879ம் வருடத்தில் சட்டப்பரீக்ஷையிலும் தேறினார். ஆனால் அவர் தமது கல்வித்திறமைக்கேற்ப, வக்கீல்தொழில்செய்து மிகுதியான பணஞ் சம்பாதிக்க விரும்பவில்லை. அழிவுறு செல்வத்தினும் மேலான அழியாச்செல்வமாகிய தேச சேவையை விருத்திசெய்வதே அருஞ்செல்வமென அவர் கருதினார். 'இனம் இனத்தை நாடும்' என்பதுபோல், இத்தருணத்தில் இதே நோக்கங்கொண்ட ஸ்ரீ அகர்க்கார் என்பவரும் அவரோடு சேர்ந்துகொண்டார். பின்னர் விஷ்ணு சாஸ்திரி என்ற மகாராஷ்டிர பாஷா நிபுணரும், மிஸ்டர் N. ஜோஷியும் இத்திருத்தொண்டில் பங்கு கொள்ள விரைந்து வந்தனர். இவர்களெல்லோரும் ஒன்று கூடி 1880-ம் வருஷத்தில் பூனாவில் ஒரு ஆங்கிலப் பள்ளிக்கூடத்தை ஸ்தாபித்தனர். நண்பர் 'ஆப்டே' என்பவரும் இவர்களது கைங்கரியத்திற்கு நண்பரானார். பின்னர் 'கேஸரி' (சிங்கம்) என்ற மராட்டிப் பாஷை பத்திரிகையும், "மகாராஷ்டிர" என்ற ஆங்கிலப் பத்திரிகையும் ஆரம்பிக்கப்பட்டது.

### வாழ்நாளின் முதற் பரீக்ஷை.

இவ்விரண்டு பத்திரிகைகளும், நிர்த்தாக்ஷிணியமாயும் ஊக்கமாயும் நியாய வாதஞ் செய்துவரும்பொழுது, கோலாப்பூர் சமஸ்தானாதிபதியவர்களின் நிர்வாக முறையிலுள்ள ஊழல்களை மேற்படி பத்திரிகையில் எழுதப்பட்ட காரணங்கொண்டு, திலகர் பெருமானுக்கு "ஒரு மனித வாழ்க்கையின் இன்பதுன்பக் கலப்பு எல்லையைக் குறிப்பிடுவதாகிய" 100 (என்ற எண்ணிக்கை கொண்ட) நாள் வரை காவல் தண்டனை விதிக்கப்பட்டது. "அக்கிரம ராஜநீதியை எதிர்த்துரைத்தால் ஆங்கில் துன்பம் வரும்; அதினின்றும் சலியாது உழைத்தால்தான் உனக்கு விடுதலை!" என்ற அழியா நீதியை இத்தண்டனை வற்புறுத்தியது. திலகர் அந்த நிலைமையிலும் தமது ஊக்கத்தைத் தளரவிடாது உரிய வண்ணம் நடந்துகொண்டார். இத்தருணத்தில் திலகர் பெருமானுக்கு உதவிபுரிய வேண்டிப் பொது ஜனங்கள் முயன்ற பொழுது, அந்த நாடகத் திருவிழாவில் ஸ்ரீ யுத கோபாலகிருஷ்ண கோகலே அவர்களும் ஒரு உருவந் தரித்து முதற் காக்ஷி யளித்ததாய்க் கூறப்படுகின்றது. நல்லவாசனையுள்ள ரோஜா மலர்களைத் தேடித் திரியும் வண்டுகள்போல், தேசத் தொண்டு புரிய வேண்டுமெனும் தேனைத் தேடி அலைந்துகொண்டிருந்த இந்திய வாலிபர் சிலரும் இத்தருணத்தில் நம் திலகர் பெருமான் என்னும் ரோஜா மலரை நாடிவந்தனர். இக்கல்வியாளர் எல்லோரும் தமது வாழ்நாள் யாத்திரையின் பொருட்டு மாதம் 1-க்கு 75 ரூபாய் வீதம் சம்பளம் பெற்றுக்கொண்டு இருபது வருஷம் வரை பூனா ஆங்கிலப் பள்ளிக்கூடத்திற்கு உழைப்பதெனத் தீர்மானித்துக் கொண்டனர். அதன் பலனாக 1885ம் வருஷத்தில் மேற்படி பள்ளிக்கூடம் காலேஜாக உயர்த்தப்பட்டது. அது இன்றைக்கும் "பூனா பெர்கூஸன் காலேஜ்" எனச் சிறப்பாக நடைபெற்றுவருகிறது.

பின்னர் அகர்க்கார் என்பவர் ஆசாரச் சீர்திருத்த விஷயமாய் தமது வேலையைச் செய்ய வெண்ணிப் பிரிந்துவிட்டார். திலகருக்கும் அகர்க்காருக்கும் இப்பொழுது அபிப்பிராயபேதம் உண்டாயிற்று. 'விவாக சம்மதவயதுச் சட்டமசோதா'' என ஒரு மசோதாவைக் கிளப்பி, அதை சட்டசபையில் அரசாங்கத்தாருதவிபெற்று நிறைவேற்ற முயன்றார் அகர்க்கர். "மதஆசார விஷயத்தில் அரசாங்கத்தார் தலையிடக்கூடாதென்ற காரணங்கொண்டு" திலகர் அந்த மசோதாவை எதிர்த்தார். அக்காலத்தில் மகாராஷ்டிர ஜனங்கள் திலகரது கொள்கையைப் புகழ்ந்தனர். பிறகு வக்கீல் பரீக்ஷைக்குப் படிக்கும் மாணுக்கர்களுக்கு ஒரு கலாசாலை இல்லாதிருந்தமையால் அக்குறையை நீக்க, அக்கறைகொண்டு, அதற்காகவே ஒரு வகுப்பை ஏற்படுத்திப் பரீக்ஷைகளுக்கு மாணுக்கர்களைத் தயார்செய்து வைத்தார். அதற்கிடையே தமது ஸமஸ்கிருதப் பயிற்சியின் விசேஷத்தால் தூண்டப்பெற்று, ரிக்வேத முழுமையும் ஆராயத்தொடங்கி "ஓரியன்" எனும் ஒரு நூலை எழுதி, அதனை 1892ம் வருஷம் லண்டனில் கூடிய ஒரு மகாநாட்டிற்கு அனுப்பி, இந்தியரின் புராதனவாழ்க்கைத் திறனை ஆங்கில உலகத்திற்கு எடுத்து விளக்கினார். இந்த கைங்கரியத்தின் பயனாக அவர் மிஸ்டர் மாக்ஸ் முல்லர் முதலிய பல மேனாட்டு வடமொழிப் புலவர்களாலும் சரியான தருணத்தில் கொண்டாடி, உதவப்பெற்றார்.

### மாதிரு சேவையில் நேரேபிரவேசித்தல்

இதற்கிடையே அவர் 1888ம் வருஷம் காங்கிரஸ் ஏற்பட்டது முதல் அதிற் கலந்திருந்து பல வேலை செய்துவந்தார். பிரித்தாளுதல் என்ற அநீதிமுறையை அதிகாரிகள் கைக்கொள்வது பிரிட்டிஷ் தருமத்திற்கு விரோதமெனப் பல தருணங்களிலும் பத்திரிகைகளில் வெளியிட்டுவந்து, அதிகாரிகளின் அதிருப்தி திருஷ்டிக்கும் பாத்திரமானார். ஹிந்து ஜனசமூகத்தை "ஒரே—பக்தி ஒற்றுமையுணர்ச்சி" என்னும் கயிற்றால் பிணித்து, அதன் அநாவசியப் பிணியை நீக்கவேண்டி, கணபதி உற்சவத்தை எல்லோரும் கொண்டாடும்படி செய்தார். மகாராஷ்டிர முழுதையும் மகம்மதியரிடமிருந்து விடுவித்து மகாராஷ்டிர வீர சிங்கமாய் விளங்கி வந்த 'சிவாஜி மகாராஜ்' திருவிழாவைத் தேசமெங்கும் கொண்டாடச் செய்தார். பம்பாயிலும் பூனாவிலும் திடீரெனத் தோன்றிய பிளேக்கையும், பஞ்சத்தையும் ஒழிக்க எண்ணி, அதிகாரிகளுடன் கலந்துழைத்து நல்லவேலை செய்தார். அவ்வாபத்தான தருணத்தில் சோல்ஜர்களைக்கொண்டு அதிகாரிகள் செய்த அதிக்கிரமங்கள் வெளிப்படுத்தப்பட்டன. 1897ம் வருடம் ஜூன் மாதத்தில் சிவாஜியின் திருநாள் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. இதற்கிடையில் ஜூன் ௴ 22ந் தேதியன்று ஸ்ரீ விக்டோரியா மகாராணியாரின் அறுபதாவது வருடக் கொண்டாட்டம் உலகெங்கும் சிறப்பாக நடைபெற்றது. அதற்கு முன்பு நடைபெற்ற சிவாஜித்திருநாளின் இடையில் ஸ்ரீ திலகர் பெருமான், சிவாஜியின் சரித்திரத்தைப் பிரசங்கிக்கும் பொழுது சிவாஜியைப் பிடித்துக் கொண்டுவரும்படி டில்லிசக்கிரவர்த்தியினால் அனுப்பட்ட அப்ஸல் கான் என்பவனை 'சிவாஜி சூதால் கொன்றனர்' என்று கூறி அதனை ஆதரித்தும் அபிப்பிராயம் கொடுத்தார். அது ஜூன் ௴ 15ந் தேதிய கேஸரியில் வெளியிடப்பட்டது. ஜூன் 22ந் தேதியன்று மகாராணியின் கொண்டாட்டத்திற்காகப் பூனா சென்று வந்த பூனா கலெக்டரும், பூனா பிளேக் இன்ஸ்பெக்டரும் தமது பங்களாவில் நுழையும் பொழுது எந்த சொம்பாவியினாலோ அன்னார் சுட்டுக் கொல்லப்பட்டனர். அதற்குக்காரணம் கேஸரியின் 15ந் தேதி வியாசமே ஆகுமெனக்கூறி, பம்பாய் ஹைகோர்ட்டார் திலகருக்கு 18 மாதக்கடுங்காவல் விதித்தார்கள். பிரிவிகௌன்சில் முன் அப்பீல் செய்வதன் பொருட்டு திலகருக்காக மிஸ்டர் ஆஸ்குவித் ஆஜராகிப் பேசியும் பலிக்கவில்லை. திலகர் வெங்காயம் சேர்ந்த சிறையுணவைச் சாப்பிடமுடியாது வருந்தியதும் இந்தியச்சிறைவாசத்தின் துன்பத்தை விளக்குகின்றது. கடைசியாகத் திலகர் அநுபவிக்க வேண்டியிருந்த 6 மாத தண்டனையும் ஸம்ஸ்கிருத அபிமானியாகிய மிஸ்டர் மாக்ஸ்முல்லரின் சிபார்சின் மேல் மகாராணியால் மன்னிக்கப்பட்டது. மீண்டும் தமது புனித கைங்கரியத்தைப் புரிவதற்கு முன் மங்கள ஸ்நானமாக, திலகரால் ராமேசுவர சமுத்திரயாத்திரை செய்யப்பட்டது. இதற்கிடையில் ஒன்று கூறவேண்டும். அதாவது:—

"நல்லோர்க்கு வருகின்ற ஆபத்தை அவர்கள் நன்மையாகவே கொண்டு, அதனையும் உலகத்திற்கு நன்மையாகவே செய்து உபகரிப்பார்" என்ற பர்த்ருஹரியின் கொள்கைப்படி, திலகர் பெருமான் தாம் சிறை வாசம் புரிந்த காலத்தில் "இந்திய வேதங்களைக் கொண்டு பல அருமையான ஆராய்ச்சி செய்து, ஆரியர்களின் வேத கால வாசஸ்தலம் (பனிக்கட்டி மிகுந்த) வட சமுத்திர கரையேயாம்" என ஒரு புதிய கருத்தை விளக்கி, உலகத்திலுள்ள பலஆங்கில (சரித்திர) ஆசிரியர்களுக்கும் ஒருவியப்பையுண்டுபண்ணினார். டாக்டர் வாரன் முதலிய அமெரிக்க மேதாவிகள் அவரைப் பலவாறு புகழ்ந்தனர்.

* *

### தாய் மகாராஜின் கேஸ். நாணய பரிசோதனை.

இத்தருணத்தில் திலக மகாராஜனது நண்பரில் ஒருவராகிய 'தாய் மகாராஜன்' என்னும் ஜமீந்தார், தாம் உயிர் நீங்கும்பொழுது-தமது குடும்பத்தின் சொத்து பரிபாலனத்தைத் திலகர் மேற்பார்த்துவருமாறு உயில் எழுதி வைத்தார். திலகர் தர்மமுறையில் நடத்துகொண்டிருந்தும், எக்காரணத்தாலோ மேற்படி தாய் மகாராஜின் மனைவி திலகரின் எதிரிகளது தூண்டுதலின்மேல், திலகர் மேற்படி சொத்தை சொந்த உபயோகஞ் செய்ததாக அவர்மீது கேஸ் தொடங்கினார். அந்தக் கேஸில் அவர் ஒரு ஐரோப்பிய மாஜிஸ்டிரேட்டால் 18 மாதக்காவல்தண்டனைவிதிக்கப்பட்டார். பிறகு ஜில்லாஜட்ஜ் அதை 6 மாதமாகக் குறைத்தார். அது சம்பந்தமான அப்பீல் விவகாரத்தில் ஸர் நாராயண சந்தாவர்க்கர், திலகருக்கு மானக்கேடு ஏற்படும்படி தீர்ப்புவரைந்திருந்தார். கடைசியில் அதுவும் பிரிவி கௌன்ஸிலில் ரத்து செய்யப்பட்டது.

* *

### கர்ஸனின் துண்டு வேலையும் காங்கிரஸின் பொறுப்பும்.

லார்ட் கர்ஸனின் திருவிளையாடல்களில் ஒன்றாகிய வங்காளப் பிரிவினையை நிபாய முறையில் கண்டித்துக் கொண்டாடுவதற்காக 1906-ம் வருஷத்திய காங்கிரஸ் கல்கத்தாவில் கூட வேண்டியது அவசியமாயிற்று. அப்பொழுது திலகர் பெருமானது மனச் சாக்ஷிக்கு விரோதமற்ற தாராளமான நீதிப் போக்குக்கும், கோகலேயின்மிதத்திற்கு உட்பட்ட தாக்ஷிணிய நியாயப் பேச்சுக்கும் சொல் முறையிலே வெகு தூரம் வேற்றுமையிருந்ததால் இருவருடைய கக்ஷியாருக்கும் அபிப்பிராய பேத முண்டாயிற்று. அவ்வருஷம் காங்கிரஸ்நடைபெறுமோ எனப் பலர் கருதியிருந்தபொழுது ஸ்ரீ தாதாபாய் நௌரோஜி, அக்கிராஸனம் வகித்து, "சுயராஜ்யம் பெறுவதே இந்தியரின் லக்ஷியம்" என ஜய பேரிகை முழங்கினார். திலகரின் "உத்தேசம்" அந்த சப முகூர்த்தத்தில் பாரத புத்திரர்களின் மனத் தோட்டத்தில் கன்றுபதியுமாறு நடப்பெற்றது. அதனைப் பயிரிட்டதில் பலர்க்குப் பெருமைப் பங்குண்டு என்று கூறுவதானாலும், திலகரது விடா முயற்சியினாலேயே அது நடப்பட்டது என்று கூறுவதில் ஒருவரும் ஆக்ஷேபிக்க முடியாது.

1907ம் ௵ சூரத்காங்கிரஸில் 1906ம் ௵ காங்கிரஸ் தீர்மானங்களில் சிலவற்றை விடுத்து, தீர்மானம் செய்யப்படப் போவதாய் பிரஸ்தாபம் பரவி ஸ்ரீயுத டாக்டர் ராஷ்விஹாரி கோஷ் தலைமை வகிப்பதாகப் பிரேரணை செய்யப்படவே அதனை உடனே திலகர் எழுந்து மறுத்தார். சிலரது அவசரச் செயல்களால் காங்கிரஸ் சபைகலைந்துபோய்விட நேர்ந்தது அப்பால் தேசீய சுதந்தரவாதிகள் 1915ம் வருடம் வரையில் காங்கிரஸைவிட்டு ஒதுக்கி நின்றனர். இவைகளுக்குத் திலகரே காரணமெனக் கூறப்பட்டது.

* *

### பெரிய தண்டனை

வங்காளப் பிரிவினையின் சம்பந்தமாய் பொதுஜனங்களுக்குள் ஒரு புதியஉணர்ச்சியும் உத்சாகமும் மேலிட்டு, சுதேசிய அபிமானம் பலப்படவே, தேசமெங்கும் கிளர்ச்சி பரவிற்று. தேச கைங்கரியத்தை யொட்டி, திலகரது பத்திரிகைகள் வழக்கம் போல் தாராள நோக்கங்கொண்டு எழுதி வந்தன. அக்கிரமக்காரியங்களில் தலையிடுவோரும், அநீதிச் செயல்களை நேசிப்போருமாகிய சிலர் வெடிகுண்டு முதலிய தீக்கருவிகளை உபயோகித்து வந்ததன்காரணமாக, திலகரது பேனாவின் முனையில் அதிகாரிகளுக்குக் கண்மூட்டம் பலப்பட்டு, அவ்வெல்லா அநீதிகளுக்கும் திலகரது பேனாவே காரணம் எனக்கோர்ட்டாரும் கருதி 6 வருடம் காவல் தண்டனை விதித்தனர். இந்தத் தீர்ப்பின் சாரம் என்னவென்றால் முன்னர் திலகரது மேல் சுமத்தப்பட்ட கேஸில் வக்கீலாயிருந்த மிஸ்டர் தேவதார் என்ற பார்ஸிகனவானே மேற்படி தீர்ப்புச் செய்தார் என்பதாம். அதிகாரிகள், திலகரை சொற்ப காலம் உடனே அகமதாபாத் ஜெயிலில் வைத்திருந்து பிறகு பர்மாவிலிருக்கும் மாண்டலேக்கு அனுப்பிவிட்டனர். 1914ம் வருடம் திலகர் விடுதலை யடைந்தார். திலகர் சென்னைத் துறைமுகம் வந்தவுடன் ஸ்பெஷல் வண்டியில் ஏற்றி, பூனாவுக்குச் சமீபம்வரை அழைத்து வரப்பட்டு தனிமோட்டாரில் இரகசியமாக அவருடைய ஜாகைக்குக் கொண்டு விடப்படும் வரை ஒருவருக்கும் தெரியாமல் செய்யப்பட்டார். ஆனால் தமது தாய்நாட்டின் விடுதலையின் பொருட்டுத் தமக்குள்ள சுயஉரிமைகள்-சிறைத்தண்டனைகள் விதிக்கப்படினும் அவற்றையெல்லாம் சிறிதும் லக்ஷியஞ்செய்யாத-அஞ்சாத நெஞ்சம் பெற்ற பாரததிலகத்திற்கு இச்சிறைவாசத்திற்கிடையே ஒரு மகத்தான துக்க சம்பவம் நிகழ்ந்தது: அது யாதெனின் 'அவரது அருமைத் தருமபத்தினியை அவர் இழக்கும்படி நேர்ந்ததாம்.'

* *

### திலகரின் ராஜபக்தி

ஸ்ரீராமனது ஜன்மவிரோதியாக நடந்துகொண்ட இராவணன், தனது உறவினர்களையும் மக்களையும் படைகளையும் முறையே யிழந்து தனியே ஆயுதமேந்திப் போர்புரிய நேர்ந்த தருணத்தில், தமது தர்மவிரதத்தைப் பரிபாலிக்கக் கருதி சத்துருவாகிய அந்த இராவணனைப் பார்த்து 'பிரதாப இலங்கேச! உனது ஆயுத மிழந்த இக்கோலத்தில் உனக்கு உதவி புரிய வேண்டியது என் கடமையாதலின், நான் இத்தருணத்தில் உன்னோடு போர்புரிவதை நிறுத்திக்கொள்ளுகின்றேன் இப்பொழுதேனும் நீ சீதையை விட்டு விடு, உன்னையும் மன்னித்து விடுகிறேன். அல்லது நீ, போர்புரிய விரும்பின் நீ அரமனை சென்று சேனைபலம் பெற்று நாளைய தினம் வருவாயாக! எனத் தமது தர்ம பரிபாலன சுபாவத்தை வெளிப்படையாக விளக்கிய பாரத இராஜவீரனாகிய ஸ்ரீ ராமன்போல், கலியுக ராவணனெனத் தோன்றிய ஜெ

இதன் தொடர்ச்சி 2ம்பக்கம் காண்க.

Best copy available
Roja Muthiah Research Library
3rd Cross Road, CPT Campus
Taramani, Chennai 600 113.

## நிருபங்கள்.

ஏமாற்றமான ஜீவனம்:—ஈழமண்டலத்தில் திருப்புகழ் பெற்ற அற்புத ஸ்தலமாகிய "கதிர்காமம்" என்னும் சுப்பிரமண்ய ஸ்வாமியின் கிருபாகடாக்ஷ-விசேஷம் மிக்க ஆலயம் ஒன்றிருப்பது யாவரும் அறிவர். இந்த ஸ்தலமகிமையைக் கூறி வேஷதாரிகளாய் ஜீவனஞ் செய்வோர் பலர். இவர்களுள்ளே யாழ்ப்பாணத்திலுள்ள ஆலங்காட்டுப் பண்ணை வாசிகளான ஒரு கூட்டத்தவர்கள சோம்பேறிகளாய்ப் போலி வேஷத்துடன் கதிர்காமம் என்ற பேரைக்கூறிச் சாஸ்திரஞ் சொல்லியும், பல ஏமாற்றமான செப்படி வித்தைகள் செய்தும் பணம் பறித்து ஜீவிப்பது பெரும் அதிசயமாகும். யாழ்ப்பாணவாசிகளை அதிகம் ஏமாற்றமுடியாது. கிராம வாசிகளையும சீர்திருத்தம் பெறாதவர்களையும் இச் சோம்பேறிகள் ஏமாற்றிவிடுகிறார்கள். தற்காலம் மேற்கூறிய சாமிவேஷகாரிகள் இருவர் நமது நகர வட்டகைக்கு வந்திருக்கிறார்கள். இவர்கள் கதிர்காமத்தில் "கொடிமரம் வைத்துத் தங்க முலாமிடப் பணம் வேண்டும்." என்று ஒரு பொய் கூறியும் நன்கு பேசாது அரைகுறை வார்த்தைபேசியும், தாங்கள் கோயிலில் இருக்கும் சிங்களஆட்கள் என்று ஜாலம் பண்ணியும் திரிகிறார்கள். இவர்கள் போலி வேஷத்தில் மயங்காதும், பெரும்பொருளை உபகரித்துப் பாவத்தையடையாதும் கமது தர்ம சீலர்கள். நற்சிவ புண்ணியங்களைச் சற்பாத்திரத்தில் செய்யும்படி வேண்டிக் கொள்ளுகிறேன். விரும்பினோர், இலங்கைச் சைவ பரிபாலன சபையாருக்குப்பணம் அனுப்பினால்கதிர்காமசுவாமிக்கு அர்ப்பணமாகும்.

அடியார்க்கடியன்
வை. மு. இரத்தினேசுவரையன்

—

ரெங்கூன்.

மழை:—ஒரு வாரமாக மழை அதிகமாய்ப் பெய்து சில பாகங்களில் பயிர்கள் மூழ்கிவிட்டன.

—

### கௌரவ உத்தியோகம்.

காரைக்குடி மிஸ்டர் சு அ சு ராமநாதன் செட்டியார் தஞ்சாவூரில் ஆனரரிமாஜிஸ்திரேட்டாக நியமுகம் செய்யப்பட்டிருக்கிறார்.

—

### கொழும்பு

சென்ற ஜூலை 31ம் தேதி சனிக்கிழமை மாலை 3 முதல் 5 மணிவரை மகிபாலன்பட்டி ஸ்ரீமான எம் சின்னையா செட்டியாரவர்கள் "அன்பும் அதன் காரியங்களும்" என்னும் விஷயத்தைப்பற்றி இனிமையாக உபந்நியசித்தார்கள். அவ்வமயம் சுமார் 3000 பேர்களுக்கு மேல் கூடியிருந்ததாக ஒரு நிருபர் அறிவிக்கிறார்.

—

### சென்னை தமிழ் கல்விச் சங்கம்

இச்சங்கத்தின ஆதரவில் நாளிது ஆடி மாதம் 16ம் தேதி வெ அச்சங்கத்தின் தலைவர் ஸ்ரீமான் சதாசிவய்யரவர்களின் அக்கிராசனத்தில் ஒரு கூட்டம் கூடிற்று தமிழ் டைப்ரைட்டிங் இயந்திரம் வாங்க வேண்டுமென ஓர் தீர்மானங் கொண்டு வரப்பட்டு நிறைவேறியது. தமிழின்பெருமையையும் அதன் உதவியையும் பற்றி அங்கு வந்திருந்த மிஸ்டர் எ. ஆர் வெங்கிட்டராம சாஸ்திரி ராவ்பகதூர் எஸ் பவானந்தம் பிள்ளை டி வி கோபாலசாமி முதலியார் முதலானவர்கள் காட்டின் போன்பு மிகவும்பாராட்டத்தக்கது' என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

### மதுரை ஸ்ரீமீனாக்ஷி ஊமைப்பிள்ளைகள் பள்ளிக்கூடம்

மதுரையில் சமீபத்தில் [அடுத்த ஆவணித் திங்களில்] ஏற்படப் போகிற ஊமைப் பிள்ளைகள் பள்ளிக்கூட சம்மந்தமாய் விளம்பரங்கள் இரண்டு மாதங்களாக அனுப்பிக் கொண்டிருக்கும் இதுவரை பிள்ளைகள் வந்து சேருவதாக கடிதங்களைக் காணேம். திருவாளைக் காவிலிருந்தும் ஒரு கடிதமும காரைக்குடியிலிருந்தும்ஒரு கடிதம் மாத்திரமே வந்திருக்கின்றன.

ஆகையால் ஊமைப் பிள்ளைகளுக்குச் சொந்தக்காரர் கூடிய விரைவில் அடியிற் கண்ட விலாசத்திற்கு எழுதிக் கொள்ள வேண்டியது. குறைந்தது 10 அல்லது 5 பிள்ளைகளாவது சேர்ந்தாலல்லவா அதற் கென்ற ஓர் கட்டிடம் வாடகைக் காவது அமர்த்தவும் ஓர் உபாத்தியாயரை ஏற்படுத்தவும் கூடும். என்பதை கவனித்து வேண்டியவர்கள் கூடிய சீக்கிரம் எழுதிக் கொள்ள வேண்டியது என அறிவிக்கிறேன்.

அ. சாமிநாத பிள்ளை
பென்ஷன்போஸ்டு மாஸ்டர்
C/o போஸ்டு மாஸ்டர் மதுரை.

## நகரவட்டகைச் செய்தி.

—

(ஸ்வதேச விஷயம்)

—

### நகரவட்டகையில் ஒருபெருங்குறை.

நம்மவர் எத்தனையோ இலட்சக் கணக்கான பொருள்களைச் செலவிட்டு நெடுந்தூரம் போய்க் கோயிற் கட்டுகின்றார்கள் குளம்வெட்டுகின்றார்கள் சத்திரங்கட்டுகின்றார்கள் பாடசாலை வைக்கின்றார்கள் இன்னும்பல தருமங்களைச்செய்தார்கள். ஆனால், தாங்கள் வசிக்கும் ஊர்களில் செய்யவேண்டிய முக்கியமான தருமங்களை கவனித்தார்களில்லை.

மனித சமூகத்துக்கு உடற்பிணியும் பசிப்பிணியும் பிரதானமானவை. அவை யிரண்டிலொன்று ஒரு மனிதனுக் கேற்பட்டாலும் அவன் எதுவும் செய்யச் சக்தியற்று இம் மன்னுலகை மறக்கவேண்டியவனாகிறான். ஆகவே உடற் பிணியை நீக்குவதற்கு வைத்தியசாலையும் பசிப்பிணியை நீக்குவதற்கு அறிவு வளர்ச்சிக்குற்ற கல்விச்சாலையும் விசாலமாகப் பெருக வேண்டும்.

இவ்விரண்டில் வைத்தியசாலையின் அவசியத்தைப்பற்றி கவனிப்போம். நமது நாட்டில் (நகரவட்டகையில்) உயர்தர வைத்தியசாலைகள் ஒரு இடத்திலுமில்லை. பத்து லட்சம் செலவிட்டுக் கோயிற் கட்டிய ஒருவருக்கு நோய் கண்டாலும் அவரைத் தூக்கிக்கொண்டு நெடுந்தூரமான பெரிய பட்டினங்கட்குப் போகவேண்டுமே தவிர, உள்ளூரில் அல்லது சமீபத்தில் நல்ல வைத்தியஞ் செய்துகொள்ள அவருக்குவசதியில்லை. என்னபரிதாபம்பாருங்கள்! நோயாளி தன்வீட்டிலிருந்து வைத்தியஞ்செய்துகொள்ளுவதற்கும் ஊர்கடந்து ஊர்போயிருந்து வைத்தியஞ்செய்து கொள்வதற்கும் எவ்வளவு வித்தியாசமிருக்கும்? நோய் கண்ட பிறகு நெடுந்தூரம்கொண்டு போவதால் நோயாளிக்கு எவ்வளவு சிரமம் என்பதையும் கவனிக்க வேண்டும். பணமுள்ளவர்கள்பாடு இப்படியானால் ஏழை யெளிவர்கள் பாடு எப்படி? அவர்கள் எங்கே போகமுடியும்?

நம், நாட்டு வைத்தியர்கள் இருக்கிறார்களே யென்றால், அவர்களைப்பற்றி ஒன்றும் சொல்லவேண்டியதில்லை. மை எடுத்தவனெல்லாம் வைத்தியன், பஞ்சாங்கம்எடுத்தவனெல்லாம் ஜோதிடன் என்றபடி ஒன்றுமறியாத சிலசோம்பேறிகளைவைத்தியம்செரியுமென்று முட்டாள் தனமாக ஒன்றிருக்க ஒன்றைச் செய்து சும்மாயிருப்பவனைக்கூட யமலோக மனுப்பிவிடுவர்—தலைவலிக்கிறதென்றால் தாதுபுஷ்டிக்கு மருந்து தருவர். நம்நாட்டுப் போலி வைத்தியர் தாதுபுஷ்டிக்குத் தந்த மருந்து மாரடைப்பையும் வயிற்று வலியையும் உண்டாக்குவது முண்டு. (உடனே அந்த வைத்தியர் நீக்கப்பட்டு வேறு வைத்தியர் அழைக்கப்படுவர்) அவர் மாரடைப்புக்கும் வயிற்றுவலிக்கும் சேர்த்து அண்ட பிண்ட சராசரங்களைத் தாக்கும் சண்டமாருத சூரணங்கொடுப்பர். அது கண்ட கண்ட விடமெல்லாம் பாய்ந்து பண்டு-பழைய-நோய்களையெல்லாம் கிளப்பி-தொண்டைக்கும் நெஞ்சுக்கும் கொண்டுவந்து விடும். பிறகு மண்டையை மண்ணிற் போட வேண்டியதுதான். இவர்களை வைத்தியர்களென்று நம்பிப் பெரிதும் மோசம்போகின்றனர். இனிமனித சரீரம் நோய்க்கிருப்பிடமாகவே யிருக்கிறது வலியார்க்கும்அஞ்சுவதில்லை மேலும்செல்வமுள்ளவருக்கும் நோய்கட்கும்நெருங்கியசம்பந்தமுண்டு. சிறுநோய்களும்செல்வர்களால்தாங்கமுடியாததாகலின் ஒவ்வொருவர்சமீபத்திலும் ஒரு வைத்தியர் மருந்தும் கையுமாக இருக்கவேண்டிய காலமிது. இந்த நிலையில் நம்மவர் வசிக்கும்ஒவ்வொரு ஊரிலும் நல்ல வைத்திய சாலைகள் இருக்கவேண்டியது எவ்வளவு அவசியமென்பதைச் சொல்லவேண்டுமோ? இன்னமும் பிரஸவத்தினால் அடிக்கடி அதிகமான மரணங்கள் சம்பவித்துக்கொண்டிருக்கின்றன. இரண்டாயிரம் பவுனுக்கும் அதிகமாகப் "பெண்வீலேயரிக்" கிடக்கும் இந்நாளில் அநியாயமாக பிரஸவகாலத்தில் வைத்திய உதவியின்றிப் பெண்கள் மாண்டுபோவதென்றால் அது சகிக்கத்தக்கதோ? அதனால் சாமான்ய குடும்பங்களின் கதி என்னாகுமென்பதையும் கவனியுங்கள். முன்னாட்களைப்போல் நாவிதப் பெண்களின் உதவி யிக்காலத்திற் பிரயோஜனப்படுவதில்லை. ஏனெனின்? முன்னாளில் சரியான வயதுவந்தபிறகே விவாகம் செய்யப்பட்டது இன்னாளிலேழுவயது முதற்கொண்டே விவாகஞ்செய்து இளமைப்பருவத்திலேயே பெண்கள் மகவீன்று பிள்ளைகட்குத் தாயாகப் பார்க்கின்றனர். ஆகவே அந்த சாஸ்திரங்களை நன்குணர்ந்த வைத்தியப் பெண்களின் உதவியின்மேல் பிரஸவத்தில் நேரும் அகாலமரணங்களைத் தடுக்கமுடியாது.

ஆகவே, நன்குபிரஸவவைத்தியங் கற்ற ஒரு மருத்துவமாதும்-உபகரவைத்தியங்கற்ற ஒரு வைத்தியரும் அவருக்குத்தக்க உதவிகளும் நல்ல இடவசதியும் ஏழைகட்கு தர்ம வைத்தியஞ் செய்யும் ஏற்பாடும் ஒவ்வொரு ஊரிலுமிருக்கவேண்டும்—வசதேசமாக ஒருவர் தம் சொந்தச் செலவில் தருமமாகச் செய்யாவிட்டாலும் தேவையையும் அவசியத்தையும் முன்னிட்டு நம்மவர் வழக்கப்படி வரி எழுதிப் பொருள் சேர்த்தாயினும் செய்தல் வேண்டும். டாம்பீககாரியங்களிற்செலவிடுவதால் ஒருபயனுமில்லை. நம் நாட்டில்வைத்தியசாலைகள் இல்லாக் குறை பெருங்குறை அதை. நிவர்த்திக்கவேண்டிய கடமை நம்மவரின் பெருங்கடமை அதனாலுண்டாகும் பயன் பெரும் பயன். இன்னுமொரு வார்த்தை சொல்லிவிட்டு இவ்விபாசத்தைமுடிக்கிறேன்.

முழு இங்கிலீஷ் வைத்தியர்கள் நம் நாட்டிற்குப் பிரயோஜனமில்லை ஆயுர்வேத முறை தெரிந்தவர்களாக இருக்கவேண்டும் அதோடு இங்கிலீஷ் முறையும் தெரிந்திருக்கவேண்டும். ஆனால் மருத்துவப் பெண்கள் மட்டும் இங்கிலீஷ் முறையிற் படித்தவர்களாகவே யிருக்கவேண்டும். என்பது என்னபிப்பிராயம்.

ஒவ்வொரு ஊரிலும் பத்தாயிர ரூபா செலவில் ஒரு கட்டிடமும் மாதம்ஒன்றுக்கு நூறுரூபா சம்பளமும் ஐம்பது ரூபா மருந்தும் போதுமானவை. அதற்கு மேல் ஊருக்குத் தக்கபடி அதிகப்படுத்திக் கொள்ளலாம். அம்மட்டில் விஷயம் திருப்தியாக நடைபெறும். ஆனல் நல்ல மேற்பார்வையும்கவனிப்பும் வேண்டும். ஏழைகளுக்கு எல்லாம் இனமாகச் செய்யப்படவேண்டும்.

எம். சின்னையாசெட்டி.

—

ஏழைகளிருக்கையில் வேதமதிபேறேன்.

—

ஊருச்செஸ்டர் ஷயரைச் சேர்ந்த கார்லிஸ்கர் வாசியான ஒரு இராணுவக்காரன் யுத்தத்தில் பல வேலைகளைச் செய்தான் அதற்காக அவனுக்கு ஒரு தங்கக்கெடியாரம் பரிசளிக்கப்பட்ட பொழுது அவன், "என் தேசத்தில் ஆயிரக் கணக்கான ஜனங்கள் ஒருவாக மில்லாதிருக்கும் பொழுது, நான் அதனை எற்றுகொள்ளமாட்டேன் என மறுத்துவிட்டானாம்.

இத்தராணுவ வீரனது உதாரச் செய்கையை நாம்பெரிதும் பாராட்டுகின்றோம் இதனைப்படித்த பொழுது நம் பாரதநாட்டுப் பெரியாரில் ஒருவராகிய தர்மபுத்திரரது நற்செய்கையும் மகாபலி சக்கிரவர்த்தியின் ஹிருதயவிலாசமும் நமக்கு அடிக்கடிஞாபகத்திற்கு வருகின்றது.

தர்மபுத்திரர் சுவர்க்கலோகஞ் சென்றபொழுது, அவரைத்தொடர்ந்து ஒருநாயும் கூடச்சென்றது. தர்மபுத்திரர் சுவர்க்கத்தின் வாயிலில் காலை வைத்தார்; நாயும் தொடர்ந்தது. அதனைக்கண்ட தேவதூதன் நாய் சுவர்க்கத்திற் செல்லக்கூடாது, எனத்தடுத்தான் அங்ஙனமாயின் என்னைப்பின்பற்றிய, நாய்க்குக் கிடையாத சொர்க்கம் எனக்கும் வேண்டாம், என்று மறுத்துவிட்டார் புத்திரர். இத்தகைய தர்மபுத்திரர் ஆக்ஷிபுரியுங்கால் தினந்தோறும் லக்ஷக்கணக்கான அந்தணர்கள உணவளிக்கப்பட்டனர் என்று நாரதமுனிவர் மகாபலி சக்கிரவர்த்தியினிடங்கூறி, தர்மபுத்திரரது அன்னதானப்பெருமையையும்ஆக்ஷியின்திறனையும் விளக்கும்பொழுது, மகாபலிவேந்தன்:- "நாரதரே! லக்ஷக்கணக்கான் பிராம்மணர்களை சமாராதனைக்குச்சென்று உண்ணுமாறு தரித்திரநிலைமையில் வைத்திருந்த ஒருவேந்தனை நீர்தர்ம புத்திரரென்றும் நீதியிற் சிறந்தவரென்றும் எனேவீண் மொழி பகலின்றீர்? என்றான். அவ்விரு மொழிகளைப் பார்க்கினும், நமது ராணுவவீரனது தன் மொழியையே நாம் மீண்டும் பாராட்டுகின்றோம்.

### தேவகோட்டை டிவிஷனல் ஆபீசரின் முகாம்.

கள்ளுக்குத்தகை சம்மந்தமாய் தேவகோட்டை டிவிஷனல்ஆபீசரின் முகாம், சிவகெங்கை 9-8-20 முதல் 10-8-20 வரை. என்றும் திருப்பத்தூர் 12-8-20 முதல 14-8-20 வரை. என்றும் அறிவிக்கப்படுகின்றது

—

### தேவகோட்டை
5-8-20

காலநிலை:- வருணபகவான் தினம்வந்து ஏய்ச்சுவிட்டு சென்று விடுகின்றார்,

டிப்டி கலெக்டரவர்கள் திருவாடானை முகாமிலிருக்கிறார்கள்,

யூனியன்:- டவுனுக்கு வேண்டிய காரியங்கள் ஒன்றுமே செய்யப்படவில்லை மேலதிகாரிகள் கவனிக்கவேண்டும் லைட்டுகள் டவுனுக்கு போதுமான தல்ல.

அனுதாபக் கூட்டம்:-லோகமான்யபாலகங்காதர திலக மஹரிஷி இறந்ததைப்பற்றி மாணவர் சங்கத்தில் மிஸ்டர் ராமநாதன்செட்டியார் அக்கிராசனத்தில் எம் முத்துராமன் செட்டியார் திலகர்சரித்திரத்தை பிரசங்கித்தார்- பலர் விஜயம் செய்திருந்தார்கள் எல்லாரும் அஞ்சலிமிஷம் மௌனமாக இருந்து திலகரை துதித்தார்கள்.

உண்மையுரைப்போன்.

—

### நாச்சியாபுரம்.
6—8—20

காலநிலை:—நேற்றுப் பெய்த பெருமழையினால் பூமி குளிர்ந்து ஏரிகளிலும், குளங்களிலும், தண்ணீர்வந்து நிரம்புகிறது. இனிமேலாவது உணவுத் தானியங்களின் விலை மலிந்து ஏழைஜனங்களின் கொடுமை ஒருவாறு தணியலாம்.

நேற்று வந்த சுதேசமித்திரன் பத்திரிகையில், உலகத்திற்கே ஒரு திலகம் போன்று விளங்கிவந்த லோகமான்ய பாலகங்காதர திலகரின் மரணச் செய்தி வெளியானதைப்பார்கமிகவும் துயரமுற்றதுடன், அன்னவருடைய வாழ்நாள் வைபவங்களை, ஜெயங்கொண்ட விநாயகர் வித்தியாசாலை மாணவர்களுக்கு எடுத்துக்கூறி, நேற்றுப் பிற்பகலை விடுமுறைநாளாகவும் விடப்பட்டது.

—

### காளையார்கோவில் தேவஸ்தானம்.

—

சிறப்பானநிர்வாகத்தைவிட்டு நீங்கியது. பாண்டி நாட்டின் சிவக்ஷேத்திரங்கள் பதினான்கினுள் ஒன்றாகிய காளையார்கோவில் தேவஸ்தானம், சிவகெங்கை ஜமீன்காரியின் அதிகாரத்திற் குட்பட்டது. பிரிட்டிஷ் ஆட்சிக்கு முன் சிவகெங்கை ஜமீனைக் கைப்பற்றிக்கொண்டு ஆண்டுவந்த மறவ வீரர்களான பெரிய மருது, சின்ன மருது காலத்தில் செவ்வனே நடைபெற்றது. அவர்கள் பிரிட்டிஷ் அதிகாரவர்க்கத்தினரால் ஒடுங்கிய பின் பூஜைமுறை சிறிது தாழ்வுபட்டது. முழு இரதங்கள் ஓட்டமுடியாமல் பழுதுபட்டுக் காலக்கிரமத்தில் சிதறிவிட்டபோதிலும் அதன் சின்னங்கள் அழியாமல் காக்கப்பட்டுவருகின்றன. இந்தஆலயத்தின் பக்கத்தில், மதுரையிலிருந்து தொண்டிக் கடற்கரைத் துறைமுகம் வரை செல்லும் பாட்டை ஒன்று ஏற்பட்டு ஜனப் போக்குவரத்தும் வண்டிப்போக்குவரத்து மதிகரித்திருந்தும் இந்த ஸ்தலத்தில் ஜனங்கள் தங்குதற்கு ஓர் சிறிதும் வசதியில்லை. நிர்ப்பயமாகத் தங்கவும் சாத்தியப்படாது. திருடர்கள் பிரயாணிகளின் மூட்டைகளையும் வண்டிமாடுகளையும் கைப்பற்றிக்கொண்டு திண்டாடும்படிசெய்துவிடுவார்கள் இந்த நிலைமையிலிருந்த ஆலயத்தை அமராவதிபுதூர் வயி. நாக. ராம. குடும்பஸ்தர்களின் முயற்சியால் தேவகோட்டை ஜமீன்தார் ஸ்ரீமான் ராமசாமிச் செட்டியாரவர்கள் காலத்தில் சிவசெங்கைஜமீன்தாரிடமிருந்து ஆலயத்தையும் பூஸ்திதிகளையும் குத்தகைபெற்று கைக்கொண்டார்கள். அப்போது ஆலய நிர்வாக நிலைமை கவலைக்கிடமாகக் காணப்பட்டது. யானை மடுவென்று சொல்லப்பெறும் பெரிய-தடாகமும் ஆலயமும் அடங்கிய நான்கு வீதிகளும் மண்மேடிட்டிருந்தன. ஜனங்களுக்கு இந்த ஆலயம் ஒன்றுளதென்று சாஸ்திர வாயிலாகத் தெரிந்திருந்தபோதிலும் செரிசிக்க ஆவல் கொள்ளும்படியான நிலைமையில்லை.

காலஞ்சென்ற ஜமீன்தார் செட்டியாரவர்களும் அவர்கள் குமாரர்களும் இந்த தேவஸ்தான விஷயத்தில் சிரத்தை பாராட்டி கிராமங்களிலுள்ள நிலங்களை கண்மாய்களையும் சீர்திருத்தி அதிக வரும்படிக்கு வழிசெய்தார்கள். ஆலயத்தையும் கட்டியவரை. அழகாக புதுப்பித்தார்கள். சுயஜாதி நண்பர்களைக்கொண்டு கோவில் தடாகம் அடங்கிய நான்கு வீதிகளிலும்பலவித கட்டிடங்களையும் மடங்களையும்பாடசாலைகளையும் அன்னதானசாலைகளையும்பலசாய ஆஸ்ரமங்களையும் ஸ்தாபிக்கச் செய்தனர். பங்களாக்கள் கட்டிக்கொள்ளுவதற்கும் இடம் கொடுத்தனர், அடுத்தாப்போல் நாற்புறங்களிலும் ஸ்நான பானாதிகளுக்கு வெவ்வேறு தடாகங்கள் உண்டு பண்ணப்பட்டன, இவ்வாறே இது ஒரு அழகிய பட்டணமாக பிரகாசித்தது. யானை மடு என்று சொல்லப்படும் தடாகத்தின் மத்தியில் மதுரை வண்டியூர் தெப்பக்குள மண்டபம்போல் ஒன்று அமைத்து தெப்ப உற்சவத்தையும் நடைபெறச் செய்தனர். ஆலயத்தில் பூஜா கைங்கரியங்கள் சாஸ்திர முறைப்படி தவறாமல் நிகழ்ந்தன. இதவு முதற்காலத்தில் தெரிசிப்பவர்கள் கைலாசமோ என்று ஆனந்தபரவசமாகும்படி விளங்கியது. நைவேத்தியங்கள், தற்காலத்திற் கேற்றவிதமாக வர்க்கன்ன வகைபாலும் பக்ஷவகையாலும் சமர்ப்பிக்கப்பட்டுவந்தன. உத்ஸவகாலங்களில் ஆடல்பாடல் அலங்காரமுதலிய சிறப்புகளால் நானாபக்கத்திலிருந்தும் ஜனங்கள் திரளாய் வந்து கூடுவார்கள். எல்லாவற்றுப்பு ஜனங்களுக்கும் போஜனத்திற்குக் குறைவில்லை செட்டி நாட்டில் இவ்வுற்சவகாக்ஷியை கண்டுகளிக்காத ஜனங்களில்லை என்றே சொல்லலாம்.

இவ்வாறு சிறப்பாய் அநேக வருஷங்களாக நடைபெறும் இவ்வாலய நிர்வாகத்தைக் கண்டு ஏழைகளும் பணக்காரர்களும் புகழ்ந்துகொண்டிருந்தனர் இதனால் நாட்டுக்கோட்டை வைசியவகுப்பார் ஆலயத்தையும் அதின் பூஸ்திதிகளையும் குத்தகைபெறுவது, திரவிய லாபம் பெறவல்ல வென்பதும், ஆலயத்தை அழகாய்ப் புதுப்பித்தும் நித்திய நைமித்திய பூஜையை விதிப்படி தாழ்வின்றி நடத்தியும், பூஸ்திதிகளை சீர்திருத்தி வருவாயை யதிகப்படுதியும் புண்ணியத்தையும் புகழையும் பெறவென்பதுவும் நன்கு வெளியாகிறது. இந்த தேவஸ்தான குத்தகை காலங்கடந்த பசலியோடு தீர்ந்துவிட்டது. தேவகோட்டை ஜமீன்தார் ஸ்ரீமான் அருணாசலஞ் செட்டியாரவர்கள் தம் குடும்பத்தார் நெடுகிலும் ஸ்ரீ காளீஸ்வரர் கைங்கரியம் செய்துவரவேண்டுமென்ற நோக்கம் மன்றி மீண்டும் குத்தகை பெற முயற்சிசெய்ததில் சிவகெங்கை ஜமீன்தார் ஸ்ரீமான் இஷ்டமில்லாமல் தேவஸ்தான நிர்வாகத்தை சிறப்பாக ஒப்புக்கொண்டார்கள் என்று தெரிகிறது தேவஸ்தானம் தேவகோட்டை ஜமீன்தாரிடமிருந்து நீங்கிவிட்டபோதிலும் நாட்டுக்கோட்டை நகரவைசியர்களின் பற்பல கட்டளைகளால் ஒருவாறு சிறப்பாக நடைபெறலாமென்று நினைப்பதற்கு சுப லக்ஷணம் கருதும் தேவஸ்தான உத்தியோகஸ்தர்கள் கட்டளைக்காரர்களின் மனம் புண்படும்படி செய்துவிடுவார்கள். இது பிரத்யக்ஷமாய் குத்தகை நீங்கிய கோவில்களில் பார்க்கலாம். உள்துறை உத்தியோகஸ்தர்களின் தொல்லைக்குப் பயந்து சிலர் கட்டளைகளைக் கூட நிறுத்திவிட்டார்களென்று தெரிகிறது.

நாட்டுக்கோட்டை நகரவைசியர் கோவில் குத்தகை பெற்றால் வருவாரப் முழுமையும், போதாவிட்டால் கையிலிருந்தும் கொடுத்து அடிக்கடி கோவிலுக்குச் சென்று நேரில் ஒவ்வொன்றையும் கவனித்து நடத்தப்படுவதால் சிறப்பாக இருக்கிறது. ஜமீன்தார்கைவசமிருப்பதால் உத்தியோகஸ்தரிடமிருந்து வரும் கடிதத்தையும் கணக்கையும் செலவுதுறைஆதார சீட்டையும் கவனிப்பதே பிரதான

இதன் தொடர்ச்சி 7ம் பக்கம்காண்க.



6ம் பக்கத் தொடர்ச்சி.

மாக இருக்கிறது நிற்க முற்காலத்தில் எல்லாச் சாமான்களும்மலிவு. அப்போது ரூபா திட்டமாக சாமான்களை ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இக்காலத்தில் சாமான்களின் விலை பன் மடங்கு அதிகரித்துக்கொண்டிருக்கின்றன, முற்காலத்தில் இரண்டு அணாவிற்கு எண்ணெய் வாங்கினால் ஆலயத்திற்குள் தீபம் நன்றாகப் பிரகாசிக்குமென்றால் இப்பொழுது அதே அணாவிற்கு வாங்கப்படும் எண்ணெய் திரி நால்ணைப்பதற்கே காண்பதற்கு ஒருநாள் ஒன்றுக்கு முன் 2 அணாவிற்கு சமயலுக்கு ஏற்பட்டிருக்கிறது. இப்பொழுது அந்த விலைக்கு வாங்கப்படும் விறகு ஏற்பட்டிருக்கும் நைமித்தியவகையில் பத்தில் ஒரு பாகம் கூட சமையல்செய்யச் சாத்தியப்படாது- ஆகவே சொற்ப அரிசியைசமையல் செய்து நைவேதனம் செய்து காவல்காரர் கையில் கொடுத்துவிட்டு எஞ்சிய அரிசியை மற்ற சிப்பந்திகள் எடுத்துக் கொள்ளுகின்றனர். முற்காலத்தில் நான்குபேர் சம்பளத்தில் பல பரிசாரகர்கள் நியமிக்கப்பட்டிருந்தால் இப்பொழுது சம்பளம் 15 ரூபாயாக இருப்பதால் ஒரு பரிசாரகர் நியமிக்கப்படுகிறது இவ்வாறே ஒவ்வொரு அம்சத்திலும் குறைவு படுவதால் சிறப்பாக நடத்தப்படவதில்லை ஆனால் சிறப்பாக நடத்துவதற்கு புதிதாக ஒன்றும் ஜமீன்தார் கையிலிருந்து கொடுக்கவேண்டிய தவசியமில்லை. ஆலயத்திற்குக் தகுந்தபடியும்வருவாய்க்குத்தகுந்தபடி பூஸ்திதிகள் இருக்கின்றன சிப்பந்திகளின நெல் சம்பளத்திற்கும் நைவேத்தியங்களுக்கும் வேண்டும் நெல்போக ரொக்கச் செலவிற்காக மிதமாகும் நெல்லை தற்கால கூடுதல் விலைப்படி விற்கப்படுவதில் பணத்திட்டப்படி ரொக்கச் செலவு கழித்து அதிகமாக ரூபா மீதப்படுகிறது. அந்தப் பணத்தைக் கொண்டு திட்டத்தை யதிகப்படுத்திவிட்டால் முற்காலம்போல சிறப்பாய் நடைபெற ஏதுவாகும். ஜனங்கள் குறை கூற இடமிராது இதற்கு கவர்ன்மெண்டார் சாங்கிஷன் செய்யவேண்டுமா? சட்டம்-செய்ய வேண்டுமோ? ஜமீன்தார் கவனித்தால் உடனே செய்துவிடலாம். கவனிக்காமையால் ஆலயங்களில் மூல புருஷரின் நோக்கம் நிறைவேறாமல் பணங்கள மிகுதிபட்டன. இக்காரணங்கள் பற்றியே ஜமீன்தாரிடமிருந்து கவனிக்கப்படுவதற்கும் குத்தகைதார்கள் நேரில் கவனிப்பதற்கும் வித்தியாசமிருக்க நேரிடுகிறது- குத்தகைக்கு விடப்பட்டிருக்கும் கல்லல், கோவிலூர் தேவஸ்தானங்களுக்கும் குத்தகைக்கு விடாத இதர தேவஸ்தானங்களையும் பார்க்கும் எவரும் நன்கறிந்து கொள்ளக் கூடும். கண்ட தேவியில் தாலூகா ஆபீஸ் ஏற்பட்டுஉத்தியோகஸ்தர்கள் சூழ்ந்திருந்தும் குத்தகைதார் காலத்தில் நடந்தபடி விசேஷ சிறப்பாய் நடைபெறவில்லை. ஆகிலும் சத்திரம் ஹக்தார் ஸ்ரீமாந் கருகி சொர்ணநாதன் செட்டியாரவர்கள் பக்திசிரத்தை காட்டி உத்ஸவ விஷயத்திற்சொந்தத்திலிருந்து செலவு செய்வதால் சிறிது சிறப்பாக தோன்றுகிறது. ஆகவே ஆலயங்களை நாட்டுக்கோட்டை நகரவைசியர்களிடம் குத்தகைக்கு விடுவதில் மிக்க நன்மையாகு மென்பதை ஜமீன்தார்கள் நன்கு கவனிக்கவேண்டும். தேவகோட்டை ஜமீன்தாரின் சிறப்பான நிர்வாகத்திலிருந்துதேவஸ்தானம் நீங்கினதை யறிந்த பக்தர்கள் இனி இப்பேர்க்கொற்ற சிறந்த உத்ஸவத்தை காண்பதறிதென்றுகவலைப்படுகிறார்கள்.

—

பலவான்குடி

திருவருளால் இங்கு நடைபெற்று வரும் மணிவாசக சங்கத்தின் பத்தாவது வருஷத்திய பதினோராவது மாதக்கூட்டம் நாளிது ஆடிமீ 10உ பிற்பகல் நான்கு மணிக்கு சித்திவிநாயக வித்தியாசாலைக் கட்டிடத்திற் கூடிற்று. ஆவணி மீ ம்மக ஷகளில் பத்தாம்வருடத்தின் நிறைவுத்திருவிழாவை க்கொண்டாடவேண்டுமென ஸ்ரீமான் கு ராம இராமசாமி செட்டியாரவர்கள் தெரிவிக்கஅவ்வண்ணமே நகரத்தார் ஆமோதித்துள்ளார்கள். கானப்பேட்டை ஸ்ரீமீனாக்ஷிசுந்தர தீக்ஷிதரவர்கள் தலைமைவகித்து சாதுசங்கமென்பதையும், கண்டனூர் ஸ்ரீமான் தெ. அரு. சித. இராமநாதஞ்செட்டியாரவர்கள் பிறப்பின் பயன் என்பதையும் உரைப்பிவந்தனவாழ்த்துடன் இனிது நிறைவுற்றது

சண்முகநாதன்

### நெற்குப்பை வாசிகளின் அபிப்பிராயம்.

இரண்டு வாரங்கட்டு முன் நெற்குப்பையில் ஒரு விசேஷமென்ற தலைப்பின் கீழ் மாப்பிள்ளை நேரிற் றூலி கட்டுவதைக் குற்றமென்று சொல்லுவது நியாயமான காரியமில்லையென்று சில காரணங்களு மெடுத்துக்காட்டி நான் எழுதியிருந்ததை நேயர்கள் படித்திருப்பார்கள். நான்கூறியது நியாயமென்றே நெற்குப்பையிலும் பலர் சொல்லுகின்றனர். சிலர் மட்டுமே நான் அப்படி யெழுதியது என் மீது குற்றமென்றும் அதற்காகவும், தாலிகட்டிய குற்றத்துக்காகவும் யேல் வட்டகையைக் கூட்டிவைக்கப்போவதாக பயமுறுத்துகின்றனராம். அப்படியே கூட்டிவைப்பார்களென்று நான் ஆவலோடு எதிர்பார்க்கிறேன்.ஏனெனில்? இவர்களுடைய அருமையான கொள்கைகளை அங்குதான் வெளிப்படுத்தமுடியும். நிற்க.

வட்டகையுக் அதிற் பேசப்படுகிற நியாயங்களும் தங்கள் கையிலிருப்பதுபோல் நெற்குப்பையிற் சிலர் நினைத்திருக்கிறார்களென்று தெரிகிறது அப்படிநினைத்திருப்பவர்களை எல்லாம் தெரிந்தவர்களென்று நான் சொல்லுவேன்! ஏனென்றால் வட்டகையைச் சார்ந்த ஊர்கள் பல இருக்கின்றன. அவற்றுள் எத்தனையோ விவேகிகளும் உலக விவகாரம் தெரிந்தவர்களும் நியாய புத்தியுள்ளவர்களும் இக்காலத்தில் மிகுந்திருக்கின்றன ரென்பதை யறியாமல் எல்லாரும் தங்களைப்போலவேதா னிருப்பார்கள் என்றும் தங்க ளிஷ்டப்படியே நடப்பார்களென்றும் யாரும் நினைத்திருந்தால் அவர்கள் உலக ஞானமில்லாதவர்களென்பதிற் சந்தேகமுண்டா?

இன்னொன்று "எங்க ளூரில் நாங்கள் எதையும் செய்கிறோம்;இவரேன் அதைப்பற்றி எழுதுகிறார்?" என்று ஒரு சிலர் கேட்கின்றனராம்: அப்படியானால் அது குற்றமே. ஆனால் உலகத்தில் நடக்கிற விஷயங்களையெல்லாம் ஒய்வில்லாமல் எழுதுகிற பத்திராதிபர்கள் என்னினும பெரிய குற்றவாளிகளாகவேண்டும்! அதைப் படிக்கிற இவர்கள் அவரினும் பெரிய குற்றவாளிகளாகவேண்டும்! ஞானமே! நீ குடிபோய்விட்டாயா?

M. சின்னையா செட்டி.

—

### ஞானபிவிருத்திசுதர்மசபா
4—8—20

ஸ்ரீலோகமான்ய பால கெங்காதர திலகர் மகாராஜா அவர்கள் தேகவியோகமடைந்த தகவல் நேற்று சாயங்காலம் 6½மணிக்குத்தான் இவ்வூருக்குப் பத்திரிகைகள் மூலம் எட்டியது அதைககேட்டதும் இவ்வூர் வாசிகள் ஆறாத்துயரமடைந்தனர். எங்கு பார்த்தாலும் அவரது அகாலமரணத்தைப் பற்றியே துக்க கரமாயிருந்தது. இன்றிரவு 8 மணிக்கு மேல்கண்ட சபையின் ஆதரவின் கீழ் ஒரு பெரிய கூட்டம் கூடியது. அதில் புதுக்கோட்டை மிஸ்டர் T.V ராமச்சந்திரய்யர் அக்கிராசனம் வகித்தார். அக்காலத்தில் திலகர் காலகதியடைந்து விட்டதற்கு வருந்துவதாகத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது சபையோர்யாவரும் எழுந்து நின்றார்கள். ஷெ அனுதாபதீர்மானத்தை லோக மான்னியரின் குடும்பத்துக்கு தந்தி மூலம் அனுப்பப்பட்டது.

G. வெங்கட்டராம்,
காரியதரிசி.

—

### (பிரசுரிக்கப்படாத விஷயங்கள்)

(பிராசீனதர்மம் தனிகைப்புராணம்) பத்திரிகையின் தற்காலபோக்குக்கும் காலத்தின் தற்காலநிலைமைக்கும் தேவையில்லை.

ரெங்கூன் ஓர்பெண்மாதின் தேசாபிமானம்:—பெண்ணின் தேசாபிமானத்தைக்குறித்து முன் மித்திரனில் பிரசுரித்துவிட்டோம். பிறிதொருவிஷயமிருப்பின்சுருக்கமாகஎழுதுக.

நடராஜன் செட்டியார் என்ற விலாசமிட்டு எழுதிய குறிப்பை பொது ஜனங்கள் நாளடைவில் கவனிப்பார்கள்.

நகரத்தார் பொது:—என்று எழுதிவந்திருக்கும் வியாசத்தில் ! ஊர் பெயர் இல்லாததால் பிரசுரிக்கப்படவில்லை.

பள்ளத்தூர்

### ஞானபிவிர்த்தி சுதர்ம சபா
1—8—20.

மகாத்மா காந்தியடிகளின் ஆணையின்படி இன்று இரவு 9 மணிக்கு M. சுப்பிரமணியஞ் செட்டியாரவர்கள் அக்ராஸனத்தின் கீழ் கிலாபத் மீட்டிங்குகூட்டப்பட்டது. ஹிந்துக்களும்முஸ்லீம்களுமாக சுமார்150 பேர்களுக்கு மேல் கூடியிருந்தார்கள் M. சைய்யது இபுறாகிம் சாகிப் அவர்களும் காரைக்குடி கிர்ஷ்ணய்யரவர்களும் அக்கிராசனாதிபதி அவர்களும் கிலாபத்விஷயமாயும் ஒத்துழையாமை யென்ற விஷயமாயும் மிக உருக்கமாகப் பேசினார்கள். பிறகு பஞ்சாப்பிலே ஸர் மைக்கேல் ஓட்வியர் அரசாக்ஷியின் ஜெனரல் டயரால் நடந்து ஸிகொதார்களைச் சுட்டுக் கொலை செய்ததைப்பற்றி நமது சாருண்ணிய கவர்ன்மெண்டார் அலக்ஷியமாக இருப்பதற்காகவும் அருக்கி விஷயத்தில் நமது கவர்ன்மெண்டார் முன் நமக்கு வாக்கு கொடுத்திருப்பதை நிறைவேற்றாமல் முஸ்லீம் ஸகோதரர்களுடைய மனதை புண்படுத்தியதற்காகவும் இச் சபை வருந்துகிறது அதற்காக நாம் எல்லோரும் அனுதாபம காட்டுவதற்கு அறிகுறியாக எல்லோரும் எழுந்திருந்து நின்று 10 நிமிஷம் வரை நம் பாரத மாதாவுக்கு ஜயம் உண்டாகவேண்டுமென்று கடவுளை நினைத்து பிரார்த்திக்க வேண்டுமென்று ஒரு பிரேரேபணையை சைய்யது இபுறாகிம் சாகிப் கொண்டுவந்தார். அதை ஸபையோர்கள் அங்கீகரித்து எல்லோரும் யெழுந்திருந்து 10 நிமிஷம் வரை நிச்சபதமாக நின்று மூன்று தடவை வந்தே மாதா கோஷம் செய்து உட்கார்ந்தார்கள். பிறகு பிரம்ம ஸ்ரீ ஞான ஸபை மெம்பர் புதுக்கோட்டை T. V. ராமச்சந்திரய்ய ரவர்கள் ஹிந்துமதத்தின் ஸமரஸ நிலைமை யென்ற விஷயமாக 2 மணிநேரம் மிக விரிவாகவும் ஸபையோர்கள் அடிக்கடி ஆனந்த கரகோஷம் செய்யும்படியாகவும் உபன்னியாஸம் செய்தார். அக்கிராசனாதிபதி அவர்கள் முடிவுரையுடன் கூட்டம்இனிது கலைந்தது.

G. வெங்கட்டராம்
காரியதரிசி

—


### சிங்கார சந்திரவதனி.

ஏர்நாட்டுக்கோட்டை

நகரசிகாமணியால் எழுதப்பட்டது

இப்புத்தகம் கண்டனூர் ஸ்ரீமான் வீர. அரு. அருணாசலஞ்செட்டியார் அவர்களால் வெளியிடப்பெற்ற ஜனசார சீர்திருத்த நாவல். கதைப்போக்கு படிப்போர் உள்ளத்தைக் கவருந்தன்மையிலும், கதையினூடே பல அரிய போதனைகளைக் கொண்டும் விளங்குகின்றது. சீர்திருத்தத்தை அவாவும் இக்காலத்தில் இந்நாவல் ஒரு பெரிய வழிகாட்டியாக விளக்கக் காணலாம். சொற்பப்பிரதிகளே கைவசமுள்ளன வாங்கமுந்துங்கள்.

விலை ரூ 1—4—0.

### கண்ணம்மாள்,

கற்பொழுக்க நாவல்,

பெண்மக்கள் தாராளமாய் வாங் வாசிக்கக்கூடிய கதை இதற்கு முகவுரையளித்த கண்டனூர் ஸ்ரீமான் மு ராம சோமசுந்தரஞ்செட்டியார்சாலப் புகழ்ந்து பேசியிருக்கிறார். மூன்று அழகிய சித்திரப்படங்களுடன் புதிதாக அச்சிடப்பட்ட பதிப்பு.

விலை அணா 8.

### இன்னுரைக்களஞ்சியம்

நாற்பது அருமையான விஷயங்களை நாற்பது அதிகாரங்களில் வெளியிடப் பெற்ற நல்ல நூல்.நல்லுரைத்திரட்டு இதுஒன்றேயாகும் விலை ரூ 1-0-0

நவீன கதா புத்தகசாலை
11, மங்மாரி வீதி
இரங்கூன்.

அல்லது, 8, குளோப்ஜார்சாலை
சென்னை.


### சமரசபோதினி.

இஃதோர் தமிழ் வாரப பத்திரிகை. பிரதி புதன்கிழமை தோறும் தஞ்சையினின்று வெளிவருவது. தமிழ்நாட்டின் ... கும் சுதந்திர ... எழுப்பி நம் தேசம் சீக்கிரம் சுயஆட்சி பெறுவதற்கே இப்பத்திரிகை ஏற்பட்டு நடத்தப்பட்டு வருகிறது. இந்தியர்களின் பிறப்புரிமைகளைப் பொன்னேபோல் போற்றி அவைகளுக்கு இடையூறுகள் வாராமல் காப்பது இப்பத்திரிகையின் முக்கிய விரதமாகும். அதிகாரவர்க்கத்தினர்களின் நியமச் செயல்கள் ஈவு இரக்கமின்றிக் கண்டிக்கப்பட்டு அந்நிய செல்வர்களால் வரும் கெடுதிகளைப் பொது ஜனங்களுக்கும் கவர்ன்மெண்டாருக்கும் அறிவிப்பது இதன் முக்கிய வேலை கிராம ஜனங்களின் முன்னேற்றம் பொது ஜனாதார விஷயங்கள் தொழில் விவசாயம் வியாபாரம் முதலியவைகளைப் பற்றியெல்லாம் ஜனாதிகாரமாகவும் எழுதப்படும். வருஷ சந்தா தபால் கூலியுட்பட ரூபாய் 5. ஆறு மாதச் சந்தா ரூபாய் 3. வெளிநாடுகளுக்குச் சந்தா ரூபாய் 7. ஒவ்வொரு தமிழரும் இப்பத்திரிகையை வாசிப்பது அவசியமாகும்.

இ. சூரியநாராயண ஐயர் பி ஏ பி எல்
பத்திராதிபர் "சமரசபோதினி"
தஞ்சாவூர்.

—

### கலியுக வர்த்தமானி.

அருமையான வாரந்த தமிழ்ப்பத்திரிகை.

12 வருஷமாக நடைபெறுகிறது.

இதில் பொதுஜன நன்மையைக்குறித்தவிஷயங்களும், பகதசரித்திரங்களும், கல்வி, கைத்தொழில்வி, யாபாரம், விவசாயம் முதலியவைகளைப் பற்றிய அருமையான வியாஸங்களும், நீதிக்கதைகளும், நியாயஸ்தலம், யுத்தம்முதலிய சமாசாரங்களும் வெளியாகிறது.

சந்தா விவரம்—தபால் கூலியுடன்

உள்நாட்டுக்கு ஒரு வருஷத்திற்கு ரூ4-0-0
வெளிநாடுகளுக்கு ஷெ ரூ.5-0-0
மாதிரி பிரதிக்கு அரை அணாஸ்டாம்புஅனுப்பவும்'

பத்திராதிபர்—டி.முத்துசாமி செட்டியார்.
17,சிங்கணன் தெரு,
பார்க்டவுன் போஸ்டு, மதறாஸ்

—


## 5000

வாடிக்கைக்காரர்கள்
இன்னும்
தேவை.

மூக்குத்தூள் 5பலம் 0—10—0
படை சங்காரி டப்பி 0—8—0
கஸ்தூரி 1/16 தோலா 2—9—0
காற்றுக்தலையணை1, 0—8—0
பாக்கிங் வி. பி. வேறு

ஸ்ரீ உமாசங்கர்
ஔஷதாலயம்
81 பிராட்வே சென்னை.

—

வரகவிதிரு.அ.சுப்பிரமணியபாரதி
[இயற்றியவை.]

### விஜயபாஸ்கரன்.

அல்லது

ஒரு குற்றத்திற்கு ஒன்பது குற்றம்.

விலை ரூ 2—0—0 (புதியது)

2. ஸ்நேகலதா வரதக்ஷிணையைக் கண்டித்துப் பேசும்அரியபுத்தகம்விலை அணா 8
3. வஜ்ரலேகை தப்பரியும் மாதின் சரித்திரம். அதிஅதிசயோக்தமமைந்தது. விலை ரூ. 0—12—0
4. மதாலஸா அக்யோங்க தம்பதிகளின் அரிய குணங்களைவெகு அற்புதமாக விளக்குவது விலை ரூ. 0—4—0
5. இராமாயண ரகசியம், ஸ்ரீராமர் சீதை, பரதன், குகன், மாருதி, விபீஷணன் இவர்களுடைய உயர்ந்தகுணங்களை எடுத்து இனிய-எளிய-நடையில் உணரத்தக்கபடி விளக்கியுள்ள அரியதோர் சிறியநூல். விலை 0—8—0

இன்னும்இதாருடையகாவலும்கிடைக்கும். வேண்டியவற்றிற்கு எழுதலாம்.
ஸ்ரீபாலசுப்பிரமணியம் சம்பெனி,
ராயபேட்டை P. O சென்னை.

### வித்தியாபிமானம் நிறைந்த கனவான்களுக்கு விஞ்ஞாபனம்.

நாள் பர்மாவில் சிலகாலம் தங்க ... நியமாக இருக்கின்ற ... தேவகோட்டை தர்மவித்திய ஞானோதய சங்கத்திற்கு உதவிபுரிய விரும்பும் கனவான்கள் காரைக்குடி வைசியமித்திரன் ஆபீஸுக்கு அனுப்பாமல் சங்கம் உதவிக்காரியதரிசி தேவகோட்டை ஸ்ரீமாந் கருகி சொர்ணலிங்கம் செட்டியாரவர்களுக்கு, ரூபாயை யனுப்பும்படி. கேட்டுக்கொள்ளுகிறேன். சித. இராமநாதன்செட்டி, காரியதரிசி
தர்மவித்யா ஞானோதய சங்கம்

### இரவில் மணிபார்க்கும் 8மூலை ரேடியம்ரிஸ்ட்லெட்கெடிகாரம்:

இரவில் மணி பார்ப்பதற்கு இக்கெடிகாரத்திற்கு விளக்கு முதலிய வேறு வெளிச்சம் வேண்டியதில்லை.இதில்ரேடியம் என்னும்ஓர்விதவஸ்துவைநெம்பர்களிலும்முள்களிலும்சேர்த்திருப்பதால்இரவில்மணிநன்றாய்த்தெரியும். இருட்டுஎவ்வளவு கருக்கலாயிருக்குமோ அவ்வளவிற்கும் எண்கள் நன்றாய்த்தெரியும். இது சரியான டைம் காட்டக்கூடியது உயர்ந்த சாமான்களால் செய்தது இதை பார்ப்பவர்கள்ஆச்சரியப்படுவார்கள்வெகுஅழகாய்இருக்கும்(1)8மூலைநிக்கல் ரிஸ்ட்லெட் ரேடியம் கெடிகாரம்ரூ 7-8-0 (2) 4மூலைரேடியம்ரிஸ்ட்லெட்கெடிகாரம் ரூபா7-8-0(3)ரவுண்டுரேடியம்ரிஸ்ட்லெட் கெடிகாரம்ரூ 6-8-0 (4) ரேடியம் இல்லாத சாதாரிஸ்ட்லெட் கெடிகாரம் ரூபா 5-0-0 ஒவ்வொரு கெடிகாரத்திற்கும் உயர்ந்ததோல்பட்டை அனுப்பப்படும். கையில் கட்டும் ரிஸ்ட்லெட் கெடியாரத்திற்கு தோல்பட்டைக்கு பதில் வெள்ளியில், செய்த ஸ்பிரிங்கு பாஸ் லெட்பட்டை 1-க்கு. கிரயம் ரூ 2-8-0 கேட்டுக் வேண்டுபவர்களுக்கு அனுப்பப்படும். ஆர்டர் செய்கிறவர்கள்பேப்பரின் பெயரைக்கண்டு எழுதவும்.

சி. எ. செங்கல்வராய நாயுடு.
நெ. 25 பெருமாள் கோவில்தோட்டம்
1-வது தெருவு மதறாஸ்.

### சுத்தமான சீயக்காய் பொடி.

(யெண்ணெயைப் போக்குவதில் ராஜா.)

கலப்படமில்லாதது. கைக்குப் பட்டுப்போல் இலெக்டிரிக்மிஷினால் அரைக்கப்பட்டது. ரயில்பார்சல் மூலம் அனுப்ப பெங்களூர் ஸ்டேஷன் டிலிவரிக்கு பாஸ் V. P. செலவு உள்பட Net 750 ரூபாய் இடை (1 மணு) டின் 1க்கு ரூ 4-10-0 1½ மணங்கு பொடிகொண்ட மூடை 1க்கு ரூபா 7-14-0 3 மணங்கு பொடிகொண்ட மூடை 1க்கு ரூபா 14-4-0. வியாபாரிகளுக்கு கூடைசமூலம் அனுப்ப 7½ மணங்கு இரட்டைச்சாக்கு மூடை 1க்கு ரூ. 33-4-0 அட்வான்ஸ் மணங்கு 1க்கு ரூ 2 வீதம் வரவேணும் மணிபார்டர் கூப்பனில் பூராவிலாஸமும் இருக்கவேணும்.

க சா கிருஷ்ணசாமி அய்யர் அண்ஸன்
சாமராஜபேட்டை பெங்களூர் ஸிட்டி
Telegrams:-Broker, Bangalore.


### விளம்பரம்.

இதனால் சகலருக்கும் தெரிவிப்பது யாதெனின், எனது பிதா அரு. அரு. குமரப்பசெட்டியார் பத்திரிகைகள் வாயிலாகத் தன்னிடம் பிதுரார்ஜிதமான பூர்வீகஸ்தாவர ஜங்கமசொத்துக்கள் ஒன்றும்கிடையாதென்றும், எல்லாம் ஸ்வயார்ஜித சொத்தென்றும் நான் வாங்கும் கடன் தன்னையாவது தன் சொத்துக்களையாவது கட்டுப்படுத்தமாட்டாதென்றும் தெரிவித்திருப்பதை நான் ஆக்ஷேபிக்கிறேன். இப்பொழுதிருக்கும் சொத்துக்கள்யாவும் பிதுரார்ஜித சொத்துக்களே. ஆகையால் எனக்கு அதில் பூரா பாத்தியதை உண்டு. பிறர் தூண்டுதலினாலோ, அல்லது வேறு எவ்விதக் காரணத்தாலோ மேற்கண்ட விலாசதார் குறிப்பிட்டிருக்கும் பொய்யான சமாசாரங்களை நான் மறுத்து எனக்கு எவ்வித சுதந்திரமும் மேற்படிசொத்துக்களில் உண்டு,என்பதை இதன் மூலம் அறிவித்திருக்கிறேன்.

இப்படிக்கு,
அரு. அரு. சுப்பிரமணியஞ் செட்டி.
கீழச்சிவல்பட்டி
இராமனாதபுரம் ஜில்லா

